# ॥ कनकधारास्तोत्रम् ॥

## கனகதாராஸ்தோத்ரம்

(1)

अङ्गं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृङ्गाङ्गनेव मुकुलाभरणं तमालम्।
अङ्गीकृताखिलविभूतिरपाङ्गलीला
माङ्गल्यदाऽस्तु मम मङ्गलदेवतायाः॥

அங்கம் ஹரே: புலக பூஷணமாச்ரயந்தீ
ப்ருங்காங்கனேவ முகுலாபரணம் தமாலம்!
அங்கீக்ருதாகில விபூதிரபாங்க லீலா
மாங்கல்யதா஽ஸ்து மம மங்கல தேவதாயா:!

மொட்டுக்களால் அழகிய தமாலமரத்தை பெண் வண்டு சுற்றித்தவழ்வது போல் ரோமாஞ்சமெய்திய ஸ்ரீஹரியின் மார்பில் தவழும் மங்கல தேவதையான லக்ஷ்மிதேவியின் கடைக்கண் அழகு - அது அனைவருக்கும் ஐச்வர்யத்தை நல்குவது - எனக்கு மங்களம் தருவதாகுக!

(2)

मुग्धा मुहुर्विदधती वदने मुरारेः
प्रेमत्रपाप्रणिहितानि गतागतानि ।
माला दृशोर्मधुकरीव महोत्पले या
सा मे श्रियं दिशतु सागरसंभवायाः॥

முக்தா முஹு: விதததீ வதனே முராரே:
ப்ரேமத்ரபாப்ரணிஹிதாநி கதாகதாநி!
மாலா த்ருசோ: மதுகரீவ மஹோத்பலே யா
ஸா மே ஸ்ரீயம் திசது ஸாகரஸம்பவாயா:!!

மலர்ந்து பரந்த உத்பலபுஷ்பத்தில் தேன் வண்டு போல் முராரியான நாராயணனுடைய முகத்தில் ப்ரேமையுடனும், வெட்கத்துடனும் மெல்ல மெல்ல போவதும் வருவதுமான லக்ஷ்மி தேவியின் கடைக்கண் தொடர் எனக்கு ஐச்வர்யத்தை கொடுக்கட்டும்.

(3)

विश्वामरेन्द्रपदविभ्रमदानदक्षं
आनन्दहेतुरधिकं मुरविद्विषोऽपि ।
ईषन्निषीदतु मयि क्षणमीक्षणार्धं
इन्दीवरोदरसहोदरमिन्दिरायाः ॥

விச்வாமரேந்த்ர பதவிப்ரம தானதக்ஷம்
ஆனந்தஹேது ரதிகம் முரவித்விஷோடபி!
ஈஷந்நிஷீதது மயி க்ஷண மீக்ஷணார்தம்
இந்தீவரோதரஸஹோதரமிந்திராயா:!!

எல்லா தேவர்களுக்கும் தலைமையான - இந்திர பதவியை - கொடுக்க வல்லதும், ஸ்ரீமந்நாராயணனுக்கும் அதிக மகிழ்ச்சியை கொடுப்பதும், நீல ஆம்பல பூபோன்றதுமான லக்ஷ்மீ தேவியின் அரைக்கண்பார்வை என்னிடம் ஒரு நொடியாகிலும் நிலை பெறட்டுமே!

(4)

आमीलिताक्षमधिगम्य मुदा मुकुन्दं
आनन्दकन्दमनिमेषमनङ्गतन्त्रम् ।
आकेकरस्थितकनीनिकपक्ष्मनेत्रं
भूत्यै भवेन्मम भुजङ्गशयाङ्गनायाः ॥

ஆமீலிதாக்ஷமதிகம்ய முதா முகுந்தம்
ஆனந்த கந்த மநிமேஷ மனங்கதந்த்ரம்!
ஆகேகரஸ்தித கநீநிக பக்ஷநேத்ரம்
பூத்யை பவேத் மம புஜங்கசயாங்கநாயா:!!

சற்றே மூடிய கண்களையுடைய முகுந்தனை மகிழ்ச்சியுடன் அடைந்து - (ஆனந்தத்தின் மூலகாரணமாயும், மறைவில்லாததுமான காமசாஸ்திரமயமாகியவர் அவர் -) சற்று சாய்வாக நிற்கும் கருவிழியும், இமையும் கொண்ட லக்ஷ்மி தேவியின் கண் எனக்கு ஐவ்சர்யத்தை பயக்கட்டும்.

(5)

बाह्वन्तरे मधुजितःश्रितकौस्तुभे या
हारावलीव हरिनीलमयी विभाति ।
कामप्रदा भगवतोऽपि कटाक्षमाला
कल्याणमावहतु मे कमलालयायाः ॥

பாஹ்வந்தரே மதுஜித: ச்ரிதகௌஸ்துபே யா
ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதி!
காமப்ரதா பகவதோऽபி கடாக்ஷமாலா
கல்யாணமாவஹது மே கமலாலயாயா:!!

மஹாவிஷ்ணுவின் கௌஸ்துபம் கொண்ட மார்பில் இந்திர நீல மணி ஹாரம் போல் விளங்குவதும், பகவானுக்கே காமத்தை கொடுப்பதுமான லக்ஷ்மி தேவியின் கடைக்கண் தொடர் எனக்கு மங்களத்தை உண்டாக்கட்டும்.

(6)

कालाम्बुदालिललितोरसि कैटभारेः
धाराधरे स्फुरति या तटिदङ्गनेव।
मातुः समस्तजगतां महनीयमूर्तिः
भद्राणि मे दिशतु भार्गवनन्दनायाः ॥

காலாம்புதாலிலலிதோரஸி கைடபாரே:
தாராதரே ஸ்புரதியா தடிதங்கனேவ!
மாது: ஸமஸ்தஜகதாம் மஹனீயமூர்தி:
பத்ராணி மே திசது பார்கவநந்தனாயா:!!

கைடபனை வதைத்த மஹாவிஷ்ணுவின் கருநீல மேகம் போன்ற சீரிய மார்பில், மேகத்தின் மேல் விளங்கும் மின்னல் கொடிபோல் பிரகாசிக்கின்றதே ஜகன் மாதாவின் மேன்மை தங்கிய வடிவம், அது எனக்கு மங்களங்களை கொடுக்கட்டும்.

(7)

प्राप्तं पदं प्रथमतःखलु यत्प्रभावात्
माङ्गल्यभाजि मधुमाथिनि मन्मथेन ।
मय्यापतेत् तदिह मन्थरमीक्षणार्धं
मन्दालसं च मकरालयकन्यकायाः ॥

ப்ராப்தம் பதம் ப்ரதமத: கலு யத்ப்ரபாவாத்
மாங்கல்யபாஜி மதுமாதினி மன்மதேந!
மய்யாபதேத் ததிஹ மந்தரமீக்ஷணார்தம்
மந்தாலஸம் ச மகராலய கன்யகாயா:!!

பாற்கடலின் மகளான மஹாலக்ஷ்மியின் மெலான கடைக்கண் என்மேல் சிக்கெனப்பதியட்டும். அதன் வலிமையாலன்றோ மன்மதன், முதலில் மதுவரக்கனை வீழ்த்திய மஹாவிஷ்ணு வினிடத்தில் இடம் பெற்றான்!

(8)

दद्याद्दयानुपवनो द्रविणाम्बुधारां
अस्मिन्नकिञ्चनविहङ्गशिशौ विषण्णे ।
दुष्कर्मघर्म मपनीय चिराय दूरं
नारायणप्रणयिनीनयनाम्बुवाहः ॥

தத்யாத்தயானுபவனோ த்ரவிணாம்புதாராம்
அஸ்மின் அகிஞ்சன விஹங்கசிசௌ
விஷண்ணே!
துஷ்கர்மகர்மமபநீய சிராய தூரம்
நாராயணப்ரணயினீ நயனாம்புவாஹ:!!

ஸ்ரீநாராயணரின் ப்ரியையான லக்ஷ்மியின் கடாக்ஷம் என்ற கார்மேகம் தயவு என்ற காற்றுத்துணையுடன், வெகு நாள் செய்த பாபமாகிய கோடையை நீக்கி பணமாகிய நீர்மழையை இந்த ஏழை சாதகக்குஞ்சின் மேல் பொழியட்டும்.

(9)

इष्टाविशिष्टमतयोऽपि यया दयार्द्र-
दृष्ट्या त्रिविष्टपपदं सुलभं लभन्ते।
दृष्टिः प्रहृष्टकमलोदरदीप्तिरिष्टां
पुष्टिं कृषीष्ट मम पुष्करविष्टरायाः ॥

இஷ்டாவிசிஷ்டமதயோऽபி யயா தயார்த்ர-
த்ருஷ்ட்யா த்ரிவிஷ்டபபதம் ஸுலபம் லபந்தே।
த்ருஷ்டிঃ ப்ரஹ்ருஷ்டகமலோதரதீப்திரிஷ்டாம்
புஷ்டிம் க்ருஷீஷ்ட மம புஷ்கரவிஷ்டராயாঃ॥

சாதராரண புத்திமான்களும் தயைததும்பும் எந்தகண் பார்வையால் மூவுலகத்தலைமைப்பதவியை கூட சுலபமாகப் பெறுகின்றனரோ, அந்த மலர்ந்த தாமரை மலரை யொத்த பார்வை-தாமரைமலரில் வீற்றிருக்கும் மஹா லக்ஷ்மியின் பார்வை-என் விருப்பத்தை நிறை வேற்றட்டும்.

(10)

गीर्देवतेति गरुडध्वजसुन्दरीति
शाकम्भरीति शशिशेखरवल्लभेति ।
सृष्टिस्थितिप्रलयकेलिषु संस्थितायै
तस्यै नमस्त्रिभुवनगुरोस्तरुण्यै ॥

கீர்தேவதேதி கருடத்வஜஸுந்தரீதி
சாகம்பரீதி சசிசேகர வல்லபேதி।
சிருஷ்டிஸ்திதி ப்ரலய கேலிஷுஸம்ஸ்திதாயை
தஸ்யை நமஃத்ரிபுவன குரோஸ் தருண்யை॥

மூன்று உலகங்களுக்கும் ஒரே நாயகரான பரமேச்வரனுக்கு உலகை ஆக்கவும், நிலைபெறச் செய்யவும், அழிக்கவும் ஆன விளையாட்டில் உடனிருக்கும் பத்நியாக 'ஸரஸ்வதீ எனவும், லக்ஷ்மி எனவும், சாகம்பரீ எனவும், சந்திரசேகரரின்பிரியை எனவும் விளிக்கப்பட்ட அவ்வன்னைக்கு நமஸ்காரம்.

(11)

श्रुत्यै नमोऽस्तु शुभकर्मफलप्रसूत्यै
रत्यै नमोऽस्तु रमणीयगुणार्णवायै ।
शक्त्यै नमोऽस्तु शतपत्रनिकेतनायै
पुष्ट्यै नमोऽस्तु पुरुषोत्तमवल्लभायै ॥

ஸ்ருத்யை நமோ஽ஸ்து சுபகர்மபலப்ரஸூத்யை
ரத்யை நமோ஽ஸ்து ரமணீய குணார்ணவாயை।
சக்த்யை நமோ஽ஸ்து சதபத்ர நிகேதநாயை
புஷ்ட்யை நமோ஽ஸ்து புருஷோத்தம
வல்லபாயை॥

நாம் செய்த நற்செயல்களின் பயனை கொடுக்கும சுருதி என்றறியப்படுபவளுக்கும், இனிய குணங்களுக்கு கடல் போன்றிருக்கும் ரதிக்கும், தாமரையை இருப்பிடமாகக் கொண்ட சக்திக்கும், புருஷோத்தமன் ப்ரியையான புஷ்டிக்கும் நமஸ்காரம், நமஸ்காரம், நமஸ்காரம்.

(12)

नमोऽस्तु नालीक निभाननायै
नमोऽस्तु दुग्धोदधिजन्मभूम्यै ।
नमोऽस्तु सोमामृत सोदरायै
नमोऽस्तु नारायणवल्लभायै ॥

நமோsஸ்து நாலீக நிபானனாயை
நமோsஸ்து துக்தோததி ஜன்ம பூம்யை।
நமோsஸ்து ஸோமாம்ருதஸோதராயை
நமோsஸ்து நாராயணவல்லபாயை॥

தாமரை மலரொத்த முகமுடையவளும், பாற்கடலை பிறந்த இடமாகக்கொண்டவளும், சந்திரன், அமிர்தம் இவற்றின் சகோதரியாயும் இருக்கிற ஸ்ரீநாராயணரின் ப்ரியையான லக்ஷ்மிதேவிக்கு நமஸ்காரம், நமஸ்காரம், நமஸ்காரம்.

(13)

सम्पत्कराणि सकलेन्द्रियनन्दनानि
साम्राज्यदान विभवानि सरोरुहाक्षि ।
त्वद्वन्दनानि दुरिताहरणोद्यतानि
मामेव मातरनिशं कलयन्तु मान्ये ॥

ஸம்பத்கராணி ஸகலேந்த்ரிய நந்தனாநி
ஸாம்ராஜ்ய தான விபவானி ஸரோருஹாக்ஷி।
த்வத்வந்தனாநி துரிதாஹரணோத்யதாநி
மாமேவ மாதரநிசம் கலயந்து மான்யே॥

ஹே தாமரைமலர் போன்றகண் உடையவளே! செல்வம் கொழிப் பனவும், கரணங்களனைத்தையும் மகிழ்விப்பனவும், சக்ரவர்த்தி பவியை நல்குவனவும், பாபங்களைப்போக்குபவன வுமான உன்னை வணங்கல்கள் என்னையே சாரட்டும்.

(14)

यत्कटाक्षसमुपासनाविधिः
सेवकस्य सकलार्थसम्पदः ।
सन्तनोति वचनाङ्गमानसैः
त्वां मुरारिहृदयेश्वरीं भजे ॥

யத்கடாக்ஷஸமுபாஸனாவிதிః
ஸேவகஸ்ய ஸகலார்த்தஸம்பதః
ஸந்தநோதி வசனாங்க மானஸைః
த்வாம் முராரிஹ்ருதயேச்வரீம் பஜே॥

எந்த அம்பிகையின் வழிபாடு, வழிபடுபவனுக்கு எல்லா வித செல்வங்களையும் நல்குமோ, அந்தவிஷ்ணு பத்னியை முக்கரணங்களாலும் சேவிக்கிறேன்.

(15)

सरसिजनिलये सरोजहस्ते
धवल तमांशुकगन्धमाल्यशोभे ।
भगवति हरिवल्लभे मनोज्ञे
त्रिभुवनभूतिकरि प्रसीद मह्यम् ॥

ஸரஸிஜநிலயே ஸரோஜ ஹஸ்தே
தவல தமாம்சுக கந்த மால்யசோபே।
பகவதி ஹரிவல்லபே மனோஜ்ஞே
த்ரிபுவன பூதிகரி ப்ரஸீத மஹ்யம்॥

தாமரைமலரில் வீற்றிருப்பவளே! கையில் தாமரையை கொண்டவளே! மிகவெண்மையான துகில், சந்தனம் மாலை இவற்றால் அழகியவளே! இனியவளே, மதிப்பிறகுரிய ஹரிப்ரியே! மூவுலகிற்கும் ஐச்வர்யம் நல்குபவளே எனக்கு மனமுவந்து அருள்வாயாக!

(16)

दिग्घस्तिभिः कनककुम्भमुखावसृष्ट-
स्वर्वाहिनी विमलचारुजलप्लुताङ्गीम् ।
प्रातर्नमामि जगतां जननीमशेष-
लोकाधिनाथगृहिणीममृताब्धिपुत्रीम् ॥

திக்ஹஸ்திபிః கனக கும்ப முகாவஸ்ருஷ்ட
ஸ்வர்வாஹினீ விமல சாரு ஜலப்லுதாங்கீம்।
ப்ராதர்நமாமி ஜகதாம் ஜனனீமசேஷ
லோகாதிநாத க்ருஹிணீ மம்ருதாப்திபுத்ரீம்॥

திக்கஜங்கள், தங்கக்குடங்களின் வழியே பெருகச்செய்த ஆகாசகங்கை நீரால் நனைந்த உடலையுடையவளும், உலகனத்துக்கும் தாய் ஆனவளும், உலக நாயகரான விஷ்ணுவின் ப்ரியையானவளும், பாற்கடல் பெண்ணுமாகிய லக்ஷ்மி தேவியை வணங்குகிறேன்.

(17)

कमले कमलाक्षवल्लभे त्वं
करुणापूरतरङ्गितै रपाङ्गैः।
अवलोकय मामकिञ्चनानां
प्रथमं पात्रमकृत्रिमं दयायाः॥

கமலே கமலாக்ஷவல்லபே த்வம்
கருணா பூரதரங்கிதை ரபாங்கைঃ
அவலோகய மாமகிஞ்சனானாம்
ப்ரதமம் பாத்ரமக்ருத்ரிமம் தயாயாঃ॥

மஹாலக்ஷ்மி! மஹாவிஷ்ணுவின் பிரியே! நீ கருணை ததும்பும் கடாக்ஷங்களால், மிக ஏழயானவர்களுக்குள்ளே இரக்கம் காட்டவேண்டிய முதல் நபரான என் மேல் பார்த்தருள்வாயாக!

(18)

स्तुवन्ति ये स्तुतिभिरमूभिरन्वहं
त्रयीमयीं त्रिभुवनमातरं रमाम्।
गुणाधिका गुरुतरभाग्यभाजिनो (भाजना:?)
भवन्ति ते भुवि बुधभाविताशयाः॥

ஸ்துவந்தி யே ஸ்துதிபிரமூபிரன்வஹம்
த்ரயீமயீம் த்ரிபுவன மாதரம் ரமாம்।
குணாதிகா குருதர பாக்ய பாஜினோ (பாஜனாঃ?)
பவந்தி தே புவி புதபாவிதாசயாঃ॥

மூன்று வேதங்களே உருவான த்ரிலோகமாதாவான லக்ஷ்மி தேவியை இந்தஸ்தோத்ரங்களால் தினந்தோறும் ஸ்தோத்ரம் செயபவர் குணம் மிக்கவராயும், மிகப்பெரிய பேறு பெற்றவராயும், அறிஞர் போற்றும் கருத்து கொண்டவராயும் ஆவர்.

கனகதாரா ஸ்தோத்ரம் முற்றிற்று